

# Voice of Jagadguru

advaitam paramanandam  an e-magazine on advaita



ஸத் ஸம்ப்ரதாயம்

An Unit of the e magazine Voice of Jagadguru)



## அருள் மொழிகள்

நாம் நம்முடைய சக்திக்குத் தகுந்த ரீதியிலே தர்மத்தை ஆசரித்து சிரேயஸ்ஸை அடைய வேண்டியது நம்முடைய கர்தவ்யம். நமக்கு அவஸ்யமானது பகவத்பாதாள் ஜனங்களுக்கு ஒரு வார்த்தை சொன்னார். "உன்னுடைய ஜீவிதத்திலே உனக்கு கிடைக்கக்கூடிய சமயத்தை (காலத்தை) வீணாக்கமல் அதை பகவானுடைய நினைவிலே கழிக்க வேண்டும்." பகவத்பாதாள், "இந்த விஷயத்தை மறக்காதே; உனக்கு கிடைக்கக்கூடிய ஒவ்வொரு சமயத்தையும் பகவானுடைய சேவையிலே, பகவானுடைய சிந்தனையிலே, பகவந் நாம ஜபத்திலே உபயோகம் செய். இந்த விஷயத்தை எப்போதும் ஞாபகத்தில் வைத்துக்கொள். இரண்டாவது, முடிந்த அளவில் பிறருக்கு உதவி செய். யாருக்கும் தொந்தரவு செய்யாதே" என்று சொன்னார்.

சரீரத்தை விட்டுவிட்டுப் போகிறபோது எதை எடுத்துக்கொண்டு போகப் போகிறோம்? ஒன்றும் கிடையாது. வரும்போது தனியாகத்தான் வந்தோம். அதேபோல் தனியாகத்தான் போக போகிறோம். அப்போது நம்மோடு யார் வருவார்? அப்போது நம்மோடு வரப்போவது ஒரே ஒர் ஆசாமி மட்டுமே. அவனுக்குத்தான் "தர்மம்" என்று பெயர். அதுதான் நம் அடுத்த ஜென்மத்தில் சுகத்தைக் கொடுக்கும். அதனால், நாம் அடுத்த ஜென்மத்திலே சுகமாய் இருக்க வேண்டும் என்று நினைத்தால் இப்போது தயங்காமல் தர்மத்தை ஆச்ரயிக்க வேண்டும். தர்மாசரண விஷயத்தில் பகவத்பாதாள், "தர்மத்தை தாராளமாக செய். அதுதான் உனக்கு இரக்ஷை ஆகும். அதுதான் உனக்கு உண்மையான நண்பன். இப்படி உனக்கு கிடைக்கக்கூடிய நேரத்தை பகவானுடைய சேவையில் உபயோகம் செய்து கூடுமான வரையிலும் பிறருக்கு உதவி செய். யாருக்கும் தொந்தரவு செய்யாமல் இரு. இந்த தர்மத்தைக் கடைப்பிடித்துக் கொண்டு ஸத்புருஷர்கள் உடைய சகவாஸத்தில் இரு. அவர்கள்தான் உனக்கு நல்வழியைக் காண்பிப்பார்கள்" என்று சொன்னார்.

—ஜகத்குரு சங்கராசார்யர் ஸ்ரீ பாரதீ தீர்த்த மஹா ஸ்வாமிகள்

ஸத் ஸம்ப்ரதாயம்

An Unit of the e magazine Voice of Jagadguru)

## விதுர நீதி

किन्तु मे स्यादिदं कृत्वा किन्नु मे म्यादकुर्वतः |
इतिकर्माणि संचिन्त्य कुर्याद्वा पुरुषोनवा ||६६||

கிந்து மே ஸ்யாதி³த³ம்' க்ரு'த்வா கின்னு மே ம்யாத³குர்வத: |
இதிகர்மாணி ஸஞ்சிந்த்ய
குர்யாத்³வா புருஷோனவா ||66||



மனிதன் இதைச் செய்தால் என்ன உண்டாகும், இதைச் செய்யாவிடில் என்ன ஏற்படும் என்பதை நன்கு ஆலோசித்து காரியங்களைச் செய்யவேண்டும், அல்லது நாம் செய்யாமலிருக்க வேண்டும். இதுவே உசந்த செயல்.

प्रसादो निष्फलो यस्य क्रोधश्चापि निरर्थकः |
नतं भर्तारमिच्छन्ति षण्ढं पतिमिव स्त्रियः ||६७||

ப்ரஸாதோ³ நிஷ்ப²லோ யஸ்ய க்ரோத⁴ஶ்சாபி நிரர்த²க: |
நதம்' ப⁴ர்தாரமிச்ச²ந்தி ஷண்ட⁴ம்' பதிமிவ ஸ்த்ரிய: ||67||

எவனுடைய சந்தோஷம், கோபம், இரண்டும் பயனில்லாமலிருக்கிறதோ, அவனை பிரஜைகள் நபும்ஸகனை (பெண்கள் விரும்பாதது) போல் விரும்பமாட்டார்கள்.

कांश्चिदर्थान्नरः प्राङ्गः लघुमूलान्महाफलान् |
क्षिप्रमारभते कर्तुं नषिघ्नयति तादृशान् ||६८||

காம்'ஶ்சித³ர்தா²ன்னர: ப்ராங்க³: லகு⁴மூலான்மஹாப²லான் |
க்ஷிப்ரமாரப⁴தே கர்தும்' நஷிக்⁴னயதி தாத்³ரு'ஶான் ||68||

புத்திமானான மனிதன் சிறு முயற்சியால் பெரிய பயன்களை அளிக்கும் காரியங்களை சீக்கிரம் ஆரம்பிப்பான். அப்படிப்பட்ட காரியங்களைச் செய்ய அவன் சிறிதும் தாமதிப்பதில்லை.

(தொடரும்….)

ஸத் ஸம்ப்ரதாயம்

An Unit of the e magazine Voice of Jagadguru)

## ஆசார்யாளின் உபதேசங்கள்

(தக்ஷிணாம்னாய சிருங்கேரி ஸ்ரீ சாரதா பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ மஹாஸந்நிதானம் ஸ்ரீ பாரதீ தீர்த்த மஹாசஸ்வாமிகள் அருளியது)

## 11. இறைவனின் தரிசனம் எப்போது கிடைக்கும்?

ஈச்வரன் மனிதர்களுக்கு சரியான பிரேரணைகள் (எண்ணங்கள்) கொடுப்பதன் மூலம் அனுக்ரஹம் செய்கிறான் என்று சாஸ்திரம் கூறுகிறது. அதாவது நம்முடைய புத்தி சரியான பாதையில் போனால்தான் நாம் சுகமாக இருக்க முடியும். ஒரு சிறு கதை பழங்காலத்திலிருந்தே சொல்லப்படுவதுண்டு.



இலக்ஷ்மிதேவிக்கும் ஸரஸ்வதி தேவிக்கும் ஒரு சமயம் வாக்குவாதம் வந்ததாம். அவர்கள் இருவரில் யார் உயர்ந்தவர் என்று. லக்ஷ்மி ஸரஸ்வதியிடம், "உன்னுடைய அனுக்ரஹம் பலருக்கும் இருக்கிறது. ஆனால், அவர்கள் ஒரு வேளை சாப்பாட்டுக்கும் வழியில்லாதவர்களாக இருக்கிறார்கள். என்னுடைய அனுக்ரஹம் பெற்றவர்களோ செல்வந்தர்களாக வாழ்கிறார்கள். கையெழுத்துப் போடத் தெரியாதவன்கூட எனது அனுக்ரஹத்தினால் இலட்சாதிபதி யாகிவிடுவான். ஆகவே உனது கிருபை தேவையில்லை" என்றாளாம். அதற்கு ஸரஸ்வதி, "சரி, ஒரு படிப்புமில்லாத மனிதன் ஒருவனுக்கு நீ அனுக்ரஹம் செய். என்ன ஆகிறது என்று பார்க்கலாம்" என்றாள். அதேபோல் படிப்பறிவு சிறிதும் இல்லாத மனிதன் ஒருவனுக்கு இலக்ஷ்மி கடாக்ஷம் ஏற்பட்டது. அவன் பெரிய செல்வந்தனானான். ஒரு நாள் தான் கட்டிய வீட்டின் பத்தாவது மாடிக்குச் சென்ற அவன், அங்கிருந்து கீழே அழகாகத் தெரிந்த ஊரைப் பார்த்தான். தான் பத்தாவது மாடியிலிருந்து கீழே குதித்தால் மிகவும் வேடிக்கையாக இருக்கும் என்ற எண்ணம் வந்தது அவனுக்கு.

## ஸத் ஸம்ப்ரதாயம்

An Unit of the e magazine Voice of Jagadguru)

"குதித்தால்தான் என்ன?" என்று நினைத்தான் அவன். இவனை மேலிருந்து பார்த்துக் கொண்டிருந்த இலக்ஷ்மியிடம் ஸரஸ்வதி, "நீ அனுக்ரஹம் செய்தது பிரமாதம். ஆனால், அவன் கீழே விழுந்து உயிரை விடப் போகிறான். உன் பணம் அவனைக் காப்பாற்றாது. உன்னால் முடியாது என்று நீ ஒப்புக்கொண்டு விட்டால் நான் அவனைக் காப்பாற்றுவேன்" என்றாள். இலக்ஷ்மியும் அதற்கு ஒப்புக் கொண்டாள். ஸரஸ்வதி தேவி அவன் மனதில் நல்ல புத்தியைக் கொடுக்க, அவன் உடனே தன் முட்டாள்தனத்தை உணர்ந்து, கீழே குதிக்கக் கூடாது என்று முடிவெடுத்தான். நான் எதற்கு இந்தக் கதையைக் கூறினேன் என்றால், இறைவன் தக்க சமயத்தில் பிரேரணைகளைக் கொடுத்து ஜனங்களை அனுக்ரஹிக்கிறான் என்பதை விளக்குவதற்கே. ஸரஸ்வதி, கதையில் வந்த மனிதனுக்கு நல்ல புத்தியைத் தகுந்த நேரத்தில் கொடுக்காமல் இருந்தால் அவன் கீழே விழுந்து இறந்திருப்பான்.

யம் ஹி ரக்ஷிதுமிச்சந்தி புத்த்யா ஸம்யோஜயந்தி தம் ||

நாம் நற்காரியங்களில் இயங்குவதற்கான பிரேரணையை இறைவன் கொடுக்கிறான். மனிதன் எந்தக் காரியத்தில் இறங்க விரும்பினாலும், அதற்கு முதலில் அவனது மனதில் அக்காரியத்தைப் பற்றிய ஓர் எண்ணம் தோன்ற வேண்டும். பிறகுதான் காரியத்தில் இறங்க முடியும். மனதில் எண்ணங்களைத் தோன்ற வைப்பதே இறைவன் தான். ஆகவே, இறைவன் இருக்கிறான் என்ற விஷயத்தில் யாருக்கும் சந்தேகமே தேவையில்லை.

"இறைவன் ஏன் நம் முன் வருவதில்லை?" என்பது சிலரின் கேள்வி. நமது நம்பிக்கை என்னவென்றால், இறைவன் எல்லாம் அறிந்தவன், எல்லாம் வல்லவன், எங்கும் நிறைந்தவன் என்று. அவனால் முடியாதது எதுவுமேயில்லை. அப்படிப்பட்ட இறைவன் நம் முன் வந்தால் நாம் அவனைத் திரும்பிப் போக விடுவோமா? சாதாரண மந்திரி நம் ஊருக்கு வந்தால்கூட, "எங்களுக்கு மின்சாரம் வேண்டும், தண்ணீர் வேண்டும், குழாய் கிணறு வேண்டும்" என்றெல்லாம் கூறி அவரைப் பிடித்துக்கொண்டு விடுவோம். இறைவனே வந்துவிட்டால் சும்மா விடுவோமா? "ஸ்வர்கத்தை இங்கே கொண்டு வந்து விடுங்கள், இல்லாவிட்டால் உங்களைப் போகவிட மாட்டோம்" என்றுகூட ஜனங்கள் கூறிவிடுவர்! ஆகவே நம் முன் இறைவன் வருவானோ? வர மாட்டான். எத்தனையோ மஹான்கள் இறைவனின் தரிசனத்தைப் பெற்றார்கள். நமக்கு அவனது தரிசனம் கிடைக்காததற்குக் காரணம், நாம் நம்முடைய முன்னோர்கள் கடைப்பிடித்த வழியை ஸாதனையை - கடைப்பிடிக்காததேயாகும். இதற்கு விளக்கம் :

(தொடரும் …..) For free e magazines : Our Mail ID : Info@voiceofjagadguru.com


Voice of Jagadguru
advaitam paramanandam

an e-magazine on advaita


ஸத் ஸம்ப்ரதாயம்
An Unit of the e magazine Voice of Jagadguru)

## என்றும் புதியவர்

### ஜகத்குரு சங்கராசார்யார் ஸ்ரீமத் அபிநவ வித்யா தீர்த்த மஹாஸ்வாமிகள்

### 2. பேரறிவு (மஹாப்ரக்ஞை)

### மஹாப்ரக்ஞை - கற்றறிந்த பண்டிதர்



மறு நாள் சபை கூடிய பின், பண்டிதர்கள் பலர் தாம் யோசித்து வைத்த விளக்கங்களைக் கூறினர். ஆனால் ஒரு விளக்கமாவது அவையில் உள்ள அறிஞர்களின் முழு உடன்பாட்டைப் பெறவில்லை. இந்த சமயத்தில், ஸ்ரீ மஹாஸந்நிதானம் குறுக்கிட்டுத் தமக்கே உரித்தான பாணியில் ஒரு பொருத்தமான விடையைக் கூறினார். ஆசார்யாளின் சிறப்பான விடையைக் கேட்ட பண்டிதர்கள் மிகுந்த வியப்படைந்தனர். மாத்தூர் ஸ்ரீ வேங்கடேச்வர சாஸ்திரிகள் அவையில், 'ஆசார்யாளால் மட்டுமே இப்படி விடையளிக்க முடியும். அவர் சாரதாம்பளின் மனித வடிவமல்லவா?' என்று வியந்து கூறினார். அந்த சபையில் கூடியிருந்த பண்டிதர்களுக்கு இது ஒரு மறக்க முடியாத சம்பவமாக அமைந்தது. ..."

இதில் கவனிக்க வேண்டிய விஷயம் ஒன்று உண்டு. சர்ச்சை நடந்த முதல் நாள் அன்றே, ஆசார்யாள் தனது அறிவாற்றலை உபயோகித்து சரியான விடை கூறியிருக்கலாம். ஆனால் ஆசார்யாள் அவ்வாறு செய்யவில்லை. இரண்டாவது நாளன்றும், அவை மீண்டும் கூடிய பின், முதலில் எல்லோருக்கும் வாய்ப்பு கொடுத்த பின்னரே தான் தமது விளக்கத்தை அளித்தார். இதுவும் அவரது பெருந்தன்மையைக் காட்டுகிறது.

### மஹாப்ரக்ஞை - கல்வியறிவும் ஆன்மிக நெறியும்

இதுவரை, ஆசார்யாளின் கல்விசார் அறிவாற்றல், அவருடைய ஆளுமையில் “பெரும்பண்டிதர்”, “ஆசிரியர்” என்ற கூறுகளாக எப்படி வெளிபட்டது என்பதை மட்டும் பார்த்தோம். இங்கே நாம் இந்த இயலின் முன்னுரையாகப் பதிவு செய்த நிகழ்வுகளை நினைவுகூர வேண்டும். லெக்கெட் என்ற மேலை நாட்டு அறிஞருடன் சாஸ்திரம் தொடர்பாக உரையாடச் சென்ற ஆசார்யாள், அதற்குச் சற்று முன்னர் ஒரு இளம் பிரம்மசாரிக்கு ஆன்மிகப் பாதையில் வழியெடுக்கச் செய்ததைப் பார்த்தோம். சாஸ்திரங்களைக் கற்பிக்கும் ஆசிரியர், அவற்றின் பொருளைக் கற்றோர் முன் விரித்துக் கூறும் ஆற்றல் பண்டிதர் என்பது

ஸத் ஸம்ப்ரதாயம்

An Unit of the e magazine Voice of Jagadguru)

மட்டுமல்லாமல் ஆசார்யாள் ஒரு குருவாகவும் இருந்தார். இம்மூன்று கூறுகளும் ஆசார் ஆளுமையில் எப்படி ஒன்றோடொன்று பிணைந்திருந்தன என்பதைச் சில உதாரணங்களின் துணை கொண்டு பார்ப்போம்.

வேதாந்தம் கற்பதன் பயன் மோக்ஷத்தை அடைவதே; அதை விடுத்து வேதாந்தம் கற்பிப்பது அல்லது உரையாற்றுவது முதலியவற்றை மட்டும் செய்வதால் பெரிய பயன் ஒன்றும் இல்லை என்பதை ஆசார்யாள் உறுதியாகக் கருதினார். இது தொடர்பாக ஆசார்யாள் தமது உபன்யாஸம் ஒன்றில் கூறியதைப் பார்ப்போம்:

“... மனத் தூய்மையில்லாமலும், சாஸ்திரத்தில் கூறப்பட்டவற்றை நடைமுறைக்குக் கொண்டு வராமலும் இருக்கும் ஒருவன் சாஸ்திரத்திற்கு விளக்கம் கொடுத்தால் அவனுடைய விளக்கம் செய்யும் திறமை மோக்ஷத்தைத் தராமல் அவனுடைய வயிற்றுப் பிழைப்புக்காக மட்டும் பயன்படுகிறது. ஒருவனுக்கு சாஸ்திரத்தில் நல்ல ஞானம் இருந்தாலும், 'அமரகோசம்' முதலியவற்றை அவன் நன்கு கற்றிருந்தாலும், இராமாயணத்தைப் படிக்கும் முறையை வைத்துக்கொண்டு அதே வகையில் மஹாபாரதத்திற்கு விளக்கம் அளிக்கும் சாமர்த்தியமும், மஹாபாரதத்தைப் படிக்கும் வகையில் இராமாயணத்திற்கு விளக்கம் தரும் திறமையும் இருப்பினும் இவையெல்லாம் தனக்குப் புகழை உண்டாக்குவதற்குப் பயன்படுமே தவிர ஆத்ம ஞானத்திற்குப் பயன்படாது...."50

அதே போல்,

“... 'நான் பரப்பிரம்மம்' என்ற உண்மையை எவனொருவன் தன்னுடைய அனுபவத்தில் உணர்கிறானோ அவன் தான் உண்மையான அத்வைதி. அத்வைத தத்துவம் சரியானது என்று கொள்கையளவில் நிற்பவரும் அத்வைதிகள் என்றே கூறப்படுகிறார்கள். ஆனால் இங்கே 'அத்வைதி' என்ற சொல் ஆகுபெயர் அளவிலேயே (அத்வைத தத்துவத்தை ஏற்றுக் கொள்பவன் அத்வைதி) நின்றுவிடுகிறது...."

என்றும் ஆசார்யாள் வேறோரிடத்தில் கூறியுள்ளார். மேலே குறிப்பிடப்பட்டவர்களைப் போல் இல்லாமல், ஆசார்யாள் ஒரு ஜீவன்முக்தராகவும், பண்டிதராகவும் விளங்கினார். இதனுடன் அவரது இயல்பான கருணையும் சேர்ந்திருந்த காரணத்தால், தம்மை அணுகுவோரை முக்தி நெறியில் வழிநடத்தவேண்டும் என்பதில் உறுதியாக இருந்தார். இந்த உறுதி அவர் பாடம் கற்பிப்பதில் எப்படி வெளிபட்டது என்பதை இப்பொழுது பார்ப்போம்:

(தொடரும்.....) மிக்க நன்றி : Centre for Brahmavidya

ஸத் ஸம்ப்ரதாயம்
An Unit of the e magazine Voice of Jagadguru)

## நீதி மஞ்ஜரீ

ஸ்ரீ ஞானானந்த பாரதீ ஸ்வாமிகள் இயற்றியது.

அத்தியாயம் - 6

### உஷஸ்தி உபாக்யானம்

(1) பிராணனுக்கு அதி ஆபத்து வந்தாலொழிய நிஷித்தமான ஆஹாரத்தை கிரஹிக்கக் கூடாது. இம்முக்யமான விஷயத்தை இக்காலத்திய நவீன நாகரீகத்தில் சேர்ந்திருப்பவர்கள் நன்றாய்த் தெரிந்து கொள்ளவேண்டும். என்ன சாமானாயிருந்தால் என்ன, யார் தொட்டுக்கொடுத்தாலென்ன, யார் சாப்பிட்ட மிகுதியாயிருந்தால் என்ன என்று அலட்சியம் செய்துகொண்டு கண்டவிடங்களில் ஆஹாரம் செய்வது மிகவும் தோஷம். கார்யார்த்தமாகப் போகிற இடங்களில் தட்டில்லாமல் நினைக்கிறபோது அகப்பட்ட அன்னத்தை புஜிப்பது ஸௌகர்யமாகத் தோன்றலாம். அந்த ஸௌகர்யம் "ஸௌகர்யம்" தான், ஆனால் அவர்கள் நினைக்கிறபடி "ஸுகர பாவம்" என்று அர்த்தமல்ல; "ஸூகர பாவம்" (பன்றித்தன்மை) என்று வ்யுத்பத்தி செய்து கொள்ளவேண்டும். இது ஹிதம், இது அஹிதம் என்று தெரிவதற்கு நமக்கு ஈசுவரன் புத்தியையும் கொடுத்து இது ஹிதம், இது நிஷித்தம் என்று நமக்குக் காட்டிக் கொடுக்க தர்ம சாஸ்திரங்களையும் ஏற்படுத்திக் கொடுத்திருக்கும் போதுகூட நாம் மிருகங்கள் மாதிரி பக்ஷ்ய, அபக்ஷ்ய விவேசனமன்னியில் இருந்தால் நம்மை ஸூகரம் (பன்றி) என்று சொல்வதில் என்ன பிசகு? ஆகையால் ஆஹாரம் கிரஹிக்கும்முன், சரியான வஸ்துதானா, இது சரியான காலந்தானா, இது சரியான இடம்தானா என்று வஸ்து, தேச கால நியமங்களை கவனித்தே கிரஹிக்க வேண்டும். பிராணனுக்கு அத்யாவஸ்தையேற்பட்ட ஸந்தர்ப்பமாயிருந்தால் ஏதேனும் ஒரு நியமத்தில் கொஞ்சம் லோபம் ஏற்பட்டால் பாதகமில்லை என்று இந்த உஷஸ்தியின் சரித்திரம் மூலமாய் தெரிகிறது.



(2) தவிரவும் பிராணஹானி ஏற்படும் போலிருந்தாலும்கூட, எல்லோரும் நிஷித்தமான ஆஹாரத்தைச் சாப்பிடக்கூடாது. நிஷித்த ஆஹாரத்தை

## ஸத் ஸம்ப்ரதாயம்

An Unit of the e magazine Voice of Jagadguru)

ஸேவித்தாவது பிராணனை ஸம்ரக்ஷிக்க வேண்டியதவசியம் தான் என்று தோன்றுவதுடன் தன் பிராணனை ஸம்ரக்ஷித்துக் கொள்வதினால் தனக்கு ஜாஸ்தியான சிரேயஸ் ஸம்பாதித்துக் கொள்ளலாமென்றாவது, மற்றவர்களுக்கு ஜாஸ்தியான உபகாரம் செய்யலாமென்றாவது இருக்க வேண்டும். தான் மிருகபக்ஷிகளைப் போல கேவலம் ஆஹார நித்திராதிகளில் காலத்தைக் கழிக்கிறவனாக இருந்தால் அவன் ஜீவித்திருப்பதினால் தனக்கும் விசேஷ லாபமில்லை, மற்றவர்களுக்கும் பிரயோஜன - மில்லை. அவன் நிஷித்தமான ஆஹார்த்தைச் சாப்பிட்டு ஜாஸ்திப் பாபத்தைச் சுமற்றிக் கொள்வதைவிட அவனுக்கு பிராணஹானி ஏற்பட்டாலும் பாதகமில்லை. ஆகையால் இந்த விலக்கு விதியும் அப்பேர்பட்டவர்களுக்குக் கிடையாது. இதை உத்தேசித்துத்தான ஸ்ரீமத் ஆசார்ப்பாதகர்கள் தன் பாஷ்யத்தில் अतश्चैता अवस्थां प्राप्तस्य विद्याधर्मयशोवतः स्वात्मपरोपकारसमर्थस्य एतदपि कर्म कुर्वतो न अघस्पर्शः इत्यभिप्रायः அதத்4சைதா அவஸ்தா2ம்' ப்ராப்தஸ்ய வித்3யாத4ர்மயஶோவத: ஸ்வாத்மபரோபகாரஸமர்த2ஸ்ய ஏதத3பி கர்ம குர்வதோ ந அக4ஸ்பர்ஶ: இத்யபி4ப்ராய:

“வித்யை, தர்மம். யசஸ் இவைகளோடு கூடியவனாயிருந்து தனக்கும் மற்றவர்களுக்கும் உபகாரம் செய்ய ஸாமாத்தியமுள்ள வனாயிருந்து இவ்விதமான தசையை அடைந்திருக்கும் போது இது மாதிரி கார்யம் செய்தால் அவனிடம் பாபம் ஒட்டாது" என்று வயாக்யானம் செய்திருக்கிறார்கள்.

(3) மேலும் அவ்வளவு யோக்கியதை வாய்ந்தவனும் தோஷமன்னியில் பரிஹாரம் தேடிக் கொள்ள இடமிருக்கும்போது தனக்கு யோக்கியதை - யிருப்பதால் தோஷமான காரியம் செய்தால் பாதகமில்லை என்று நினைக்கக்கூடாதென்ற தத்வத்தை, உஷஸ்தி ஜலம் ஸ்வீகரிக்க மாட்டேன் என்று சொன்னதிலிருந்து தெரிந்து கொள்ளவேண்டும். தன்னிடம் எவ்வளவு யோக்கியதை இருந்தாலும் நிவர்த்திக்கக்கூடிய நிஷித்த கார்யங்களை நிவர்த்தி செய்தே தீர வேண்டும். தன் யோக்கியதையின் மஹாதம்யத்தால் அந்த தோஷத்தை நிவர்த்தித்து விடலாமென்று அஹம்பாவத்தால் நினைப்பது ஜாஸ்தியான பாபத்திற்கே ஹேதுவாகும். தெரியாமல் தவறுதல் செய்கிறவனைவிட இவனுக்கே பாபம் அதிகம் இவனை நரகத்திலேயே கொண்டு சேர்க்கும். ஆகையால்தான் வித்வான் என்ற அஹம்பாவமன்னியில் கேவலம் பிராணஹானி ஏற்படக்கூடிய அவஸ்த்தையென்ற நிமித்தத்தை மாத்திரம் வைத்து மேலே சொல்லியபடி நிஷித்த ஸேவை ஸம்பவித்தால் தோஷமில்லையென்று தாத்பர்யம். (தொடரும் ...) மிக்க நன்றி : ஸ்ரீ ஞானானந்த பாரதீ க்ரந்த ப்ரகாசன ஸமிதி

ஸத் ஸம்ப்ரதாயம்

An Unit of the e magazine Voice of Jagadguru)

## ||श्रीशारदास्तोत्रम्||

### श्रीशृङ्गाद्रौ श्रीशारदानवरात्रोत्सवसमये

### ஶ்ரீஶாரதா³ஸ்தோத்ரம்

### (ஶ்ரீ சிருங்க கிரியில் சாரதாநவராத்திரியின்போது)

(ஶ்ரீ சிருங்ககிரி ஶ்ரீ சாரதா பீடாதிபதி ஜகத்குரு ஶ்ரீ ஸச்சிதானந்த சிவாபிநவ ந்ருஸிம்ஹ பாரதீ மஹாஸ்வாமிகள் இயற்றியது)

आगत्य कालाहिधिया हि वेणीं गृहीतुकामः खगराण्णिरीक्ष्य |
निह्नोतुमिच्छत्ययमम्ब नैजां भ्रान्तिं त्वदने परिसेवनात्किम् ||३९||



ஆக³த்ய காலாஹிதி⁴யா ஹி வேணீம்’ க்³ரு’ஹீதுகாம: க²க³ராண்ணிரீக்ஷ்ய |
நிஹ்னோதுமிச்ச²த்யயமம்ப³ நைஜாம்’ ப்⁴ராந்திம்’ த்வத³னே பரிஸேவனாத்கிம் ||39||

தாயே! இது கருநாகம் எனக் கருதிப்பறவையரசன் உன் கேசப்பின்னலைப்பிடிக்கவந்தவன் உற்றுப்பார்த்துத் தன் பிரமையை உன் திருவடி சேவையால் மறைக்க விரும்புகிறானோ? (39)

लोके ह्येकः पक्षः शुक्लश्चान्यश्च कृष्ण एवेह |
द्वावपि शुक्लौ पक्षौ धत्ते गरुडः किमम्ब तव वाहः ||४०||

லோகே ஹ்யேக: பக்ஷ: ஶுக்லஶ்சான்யஶ்ச க்ரு’ஷ்ண ஏவேஹ |
த்³வாவபி ஶுக்லௌ பக்ஷௌ த⁴த்தே க³ருட³: கிமம்ப³ தவ வாஹ: ||40||

உலகில் ஒன்று கிருஷ்ணபக்ஷம் (கருநிற இறகு கிருஷ்ணபக்ஷம்) மற்றொன்று சுக்லபக்ஷம் (வெண்ணிற இறகு - சுக்லபக்ஷம்) என்று உண்டு. உன் வாகனமான கருடனோ இரு சுக்லபக்ஷங்கள் கொண்டிருக்கிறான். அது ஏன்? (கருட வாஹனக்காட்சி) (40).

हस्तान्तरस्थपरशुं शम्भोर्भूषार्थमागतान्नागान् |
दृष्ट्वा भीतो हरिणश्चरणं शरणं जगाम तव वाणि ||४१||

ஹஸ்தாந்தரஸ்த²பரஶும்’ ஶம்போ⁴ர்பூ⁴ஷார்த²மாக³தாந்நாகா³ன் |
த்³ரு’ஷ்ட்வா பீ⁴தோ ஹரிணஶ்சரணம்’ ஶரணம்’ ஜகா³ம தவ வாணி ||41||

## ஸத் ஸம்ப்ரதாயம்

An Unit of the e magazine Voice of Jagadguru)

வாணி! சிவனின் கையில் கோடரியையும் ஆபரணங்களாக வந்த நாகங்களையும் கண்டு பயந்த மான் உன் சரணங்களில் சரணடைந்ததோ? (41)

धत्ते कुरङ्गं विधुरेष पूर्णो मदास्यचन्द्रस्तमधः करोति |
इत्येतयोर्भेदविबोधनाय कुरङ्गमम्ब त्वमधः करोषि ||४२||

த⁴த்தே குரங்க³ம்' விது⁴ரேஷ பூர்ணோ மதா³ஸ்யசந்த்³ரஸ்தமத⁴: கரோதி |
இத்யேதயோர்பே⁴த³விபோ³த⁴னாய குரங்க³மம்ப³ த்வமத⁴: கரோஷி ||42||

தாயே! "இந்த பூர்ண சந்திரன் மானைத்தன்னிடம் கொண்டுள்ளான். என் முகமாகிய சந்திரன் அந்த சந்திரனை வென்று தாழ்த்திவிட்டான். இவ்விரண்டினிடையே (வானிலுள்ள சந்திரனுக்கும் முக சந்திரனுக்குமிடையே) வேற்றுமை காட்ட (வானிலுள்ள சந்திரனிடமுள்ள) மானை நீ உன் கீழே வைத்துள்ளாய். (42)

समाश्रयेयं यदि पुष्करस्थमब्जं तदा स्यात्पतनं हि दर्शे |
ममेति मत्वा मृगशाबकोऽयं पदाब्जमेवाश्रयते तवाम्ब ||४३||

ஸமாஶ்ரயேயம்' யதி³ புஷ்கரஸ்த²மப்³ஜம்' ததா³ ஸ்யாத்பதனம்' ஹி த³ர்ஶே |
மமேதி மத்வா ம்ரு'க³ஶாப³கோ(அ)யம்' பதா³ப்³ஜமேவாஶ்ரயதே தவாம்ப³ ||43||

தாயே! "வானில் உள்ள தாமரையை (சந்திரனை) தான் அண்டினால் அமாவாஸ்யையன்று பிடிப்பின்றி எனக்கு கீழே வீழ்ச்சி நேரும்" என எண்ணிய இந்தமான் குஞ்சு உன் சரணத்தாமரையையே சார்ந்துள்ளது.(43)

शुक्लादौ शशिनं स्वकीयशरणं पूर्णं विचिन्वन्मृगो
वाण्यास्यं तव वीक्ष्य हृष्टहृदयः पूर्णो मया चन्द्रमाः |
प्राप्तश्चेति तवाङ्घिसन्निधिमसावगत्य वेगात्ततो
नास्मिन्नास्ति ममावकाश इति किं तिष्ठत्ययं भारति ||४४||

ஶுக்லாதௌ³ ஶஶினம்' ஸ்வகீயஶரணம்' பூர்ணம்' விசின்வன்ம்ரு'கோ³
வாண்யாஸ்யம்' தவ வீக்ஷ்ய ஹ்ரு'ஷ்டஹ்ரு'த³ய: பூர்ணோ மயா சந்த்³ரமா: |
ப்ராப்தஶ்சேதி தவாங்கி⁴ஸந்நிதி⁴மஸாவக³த்ய வேகா³த்ததோ
நாஸ்மின்னாஸ்தி மமாவகாஶ இதி கிம்' திஷ்ட²த்யயம்' பா⁴ரதி ||44||

பாரதி! வாணி ! சுக்லபக்ஷத்தொடக்கத்தில் தன்னிருப்பிடமான பூர்ணசந்திரனைத்தேடிய இந்த மான், உன் முகத்தைக்கண்டதும் "இதோ பூர்ணசந்திரனைக் கண்டுகொண்டேன்" என்ற ஸந்தோஷத்துடன் உன் சரணங்களின் அருகாமையை வேகத்துடன் அணுகி, இங்கு எனக்கு இடமில்லாமல் போகாதென நம்பி நிற்கிறதோ? (44)

(தொடரும் ...)

ஸத் ஸம்ப்ரதாயம்

An Unit of the e magazine Voice of Jagadguru)

# ஸ்ரீமத் அத்யாத்ம ராமாயணம்

## பாலகாண்டம்

### இரண்டாவது ஸர்கம்

சுமையைத் தாங்க முடியாத பூமிதேவி, பிரும்மா முதலிய தேவர்களிடம் செல்லுதல்; பகவான் மகாவிஷ்ணு, அவர்களுடைய பிரார்த்தனைக்குச் செவிசாய்த்து, அவர்கள் முன் தோன்றி தைரியம் கூறுதல்.

பார்வதி சொன்னது : ஜகத்பிரபுவே! நான் மிகவும் பாக்கியம் செய்தவள்; தங்கள் அருளுக்கும் பாத்திரமாகி விட்டேன் என்பது உண்மையானது ! தங்கள் அருளினால், சிக்கலான என்னுடைய சந்தேக முடிச்சுகள் எல்லாம் முழுமையாக அவிழ்க்கப்பட்டு விட்டன. தங்கள் திருமுகத்திலிருந்து, சம்சார பயத்தைப் போக்கக் கூடிய ராம தத்துவமாகிய அமுதச்சாற்றினை மேன்மேலும் பருகியும் கூட என் மனம் இன்னும் திருபதியை அடையவில்லை. ஸ்ரீராமருடைய கதை, தங்களிடமிருந்து சுருக்கமாகக் கேட்கப்பட்டது. அதுவே, இப்போது என் ஆவலை முழுமையாக தூண்டி விட்டுவிட்டது. எனவே, இப்போது, ஸ்ரீராமருடைய வரலாற்றை தெளிவான சொற்களால் விரிவாகக் கேட்க விரும்புகிறேன். ப்ரபோ! தயை கூர்ந்து எனக்கு அருளுங்கள்.

தேவி! மிகவும் ரகசியமானதும் மிக உயர்ந்ததும், முன்னொரு காலத்தில் ராமனால் எனக்குக் கூறப்பட்டதுமான அத்யாத்ம ராமாயணம் என்ற ராம சரிதத்தை உனக்குச் சொல்லப் போகிறேன். கேள்! என்று பரமேஸ்வரனும் கூறலானார்.

மூன்று வகையான தாபங்களைப் போக்கும் அந்த வரலாற்றை இப்போது உனக்குச் சொல்கிறேன். அதைக் கேட்டதுமே, அக்ஞானத்தால் தோன்றும் பெரும் அச்சத்திலிருந்து உயிரினம் விடுபடுகிறது. அளவற்ற செல்வத்தைப் பெறுகிறது; நீண்ட ஆயுளையும் மக்கட்பேற்றையும் பெறுகிறது. பத்துத் தலைகள் உடைய ராவணன் முதலிய ஏராளமான அசுரக் கூட்டங்களின் (பாவச்) சுமையில் மூழ்கித் தவித்த பூமிதேவி, கோமாதாவின் வடிவத்தை எடுத்துக் கொண்டு, தேவர்களுடனும் முனிவர்களுடனும் கூட, தாமரையை ஆசனமாகக் கொண்ட பிரும்மாவின் உலகுக்குச் சென்றாள். தனக்கு நேர்ந்துள்ள துன்பத்தையெல்லாம், அழுது கொண்டே பிரும்மாவிடம் விரிவாக கூறினாள். அவளின் கூற்றை கேட்ட பின், ஒரு முகூர்த்த காலம் தியானம் செய்த பிரும்மா. எல்லோர் இதயத்திலும் அந்தர்யாமியாக விளங்குகின்ற காரணத்தால், நடப்பது அனைத்தையும் தன் உள்ளத்தால் உணர்ந்து கொண்டார். உடனே, தேவர்கள் புடைசூழ, பூமிதேவியுடன்

கூட பாற்கடலின் கரையை அடைந்தார். பிரும்மா எல்லா மக்களின் இதயத்தில் விளங்குபவரும் அழிவற்ற வரும் அனைத்தையும் அறிந்தவருமான பகவான் ஹரியை, புனிதமான வேத மந்திரங்களாலும், புராணங்களில் கூறப்பட்ட தோத்திரங்களாலும் கண்களில் ஆனந்தக் கண்ணீர் பெருக. குரல் தழுதழுக்கப் பக்தியோடு தோத்திரம் செய்தார்.அப்போது, ஒளிவீசுகின்ற ஆயிரக்கணக்கான சூரியர்களைப் போல் பேரொளி படைத்த ஹரிபகவான், சூழ்ந்திருந்த இருளை விலக்கிவிட்டுக் கீழ்த் திசையில் தோன்றினார்.

புண்ணியம் செய்யாதவர்களால் காண முடியாதவரும். இந்த்ரநீல மணி போல் ஒளிர்பவரும். புன்முறுவலிக்கும் முகத்தோடு கூடியவரும். தாமரைக் கண்ணரும். கிரீடம் மாலை-கேயூரம் குண்டலம்-கடகம் முதலியவைகளால் அழகுடன் திகழ்பவரும், ஸ்ரீவத்ஸம் கௌஸ்துபம் ஆகியவற்றின் ஒளியோடு கூடியவரும், தோத்திரம் செய்துகொண்டிருக்கிற ஸனகர் முதலியோராலும் பார்ஷதர்களாலும் சூழப்பட்டவரும், சங்கு சக்கரம் கதை - தாமரை வனமாலைகளுடன் விளக்குபவரும், பொன்மயமான உபவீதம் ஆடைகள் அணிந்தவரும் லட்சுமி பூமி தேவிகளுடன் கருடன் மேல் ஆரோகணித்தவரும், காணமுடியாத பேரொளிப் பிழம்பாகத் தோற்றமளித்த ஸ்ரீமந்நாராயணனை பிரும்மா தன் கண்களால் ஒரு வழியாகக் கண்டு தரிசித்தார். உடனே, பேரானந்தத்தால் குரல் தழுதழுக்கத் தோத்திரம் செய்யத் தொடங்கினார்.(தொடரும்...)

Our Website link : https://voiceofjagadguru.com/voj/

Telegram Channel : https://t.me/voiceofjagadguru

Instagram Channel :

https://www.instagram.com/stories/voice_of_jagadguru_voj/3601249542534134684?igsh=MW90YW13N2c5b2hqaA==

WhatsApp Community Channel: https://chat.whatsapp.com/Ly4wlaTu8Kc3sjjEYU8KGu

YouTube Channel : https://youtube.com/@jagad-guru-channel?si=brkLFqiz8sZJ6UIl

Facebook link : https://www.facebook.com/share/1Du5xkve4e/

For free e magazines : Our Mail ID : Info@voiceofjagadguru.com

ஜகத்குரு சங்கராசார்யர் ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ மஹாஸந்நிதானம் ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ பாரதீ தீர்த்த மஹாஸ்வாமிகள், ஜகத்குரு சங்கராசார்யர் ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ ஸந்நிதானம் ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ விதுசேகர பாரதீ மஹாஸ்வாமிகள் அவர்களின் பொற்பாதங்களில் சமர்ப்பிக்கிறோம்